ணாங்கினைத் தரும். ஊழ்வினையால் வந்த நோயை நம் செயலால் நல்ல மருந்துண்டு தீர்த்துக்கொள்வது போலப் பழவினையால் நமக்கு நேர்ந்த துன்பங்களையுஞ் சிவபெருமானை எண்ணி முயன்று நாம் தீர்த்துக்கொள்ளல் வேண்டும். மார்க்கண்டேயர் தமக்கு ஏற்பட்ட பதினாறு ஆண்டைச் சிவபெருமான் திருவருட்டுணையால் என்றும் பதினாறாக ஆக்கிக்கொள்ளவில்லையா? ஆகலால், நாமுந் தீய நினைவுகளையுந் தீய செயல்களையும் விட்டு முழுமுதற் கடவுளான சிவபெருமானை இடைவிடாது தொழுதுகொண்டும், எல்லா உயிர்களிடத்தும் அன்பும் இரக்கமும் உடையராய் நடந்தும், அறிவுடையோர் நூல்களை இடைவிடாது கற்றும், அவர் பொன்மொழிகளைக் கேட்டுந், தூய நினைவுந் தூய சொல்லுந் தூய செயலும் உள்ளவர்களாய் ஒழுகி வருவோமாயின் உலகத்தாரால் நன்கு மதிக்கப்படும் நல்ல பிள்ளைகள் நமக்குப் பிறப்பார்களென்பது திண்ணம். பிள்ளைகள் நல்லவராதற்குந் தீயவராதற்கும் நம் தாய்மார்களே முதன்மையான வழிகாட்டிகளாயிருத்தலால், அவர்கள் இக்கடமையின் பொருட்டாகவாவது நல்லறிவுடையவர்களாய் நடக்க மிகவும் பழகிக்கொள்ளல் வேண்டும். தாய்மார் மிகவுந் துன்புற்றுப் பிள்ளை பெறுதலும், பெற்றபிள்ளை பலவகை நோய்களுக்கு இரையாகி மடிதலும், அங்ஙனம் மடியாது தப்பித் தவறிப் பிழைத்த பிள்ளைகளுந் தீயராய்ப் போதலும் எல்லாந் தாய்மார்களின் அறியாமையினாலுந் தீய செய்கைகளாலுஞ் சோம்பலாலும் விளையுந் துன்பங்களேயல்லது வேறு இல்லையென்று என் அருமைத் தாய்மார்களே! நீங்கள் திண்ணமாய் நம்புங்கள்! நம் அருமைத் தாய்மார்கள் மட்டுங் கற்றறிவுடையவர்களாகவுங், நல்லன்பும் நல்லெண்

ணமும் உடையவர்களாகவும் இருந்தால் இத் துன்பங்கள் தலைக்காட்டுமா? எல்லாரும் நல்லறிவுடையராகவும் எல்லாரும் நல்லன்பும் நல்லெண்ணமும் நற்செய்கையும் உடையராகவும் விளங்க, இந்நிலவுலகந் தேவர்கள் உறையும் வானுலகமே யாகி, இந்நிலவாழ்க்கை தேவர்கள் வாழும் இன்பவாழ்க்கையே யாகி, எல்லாம் இன்பமேயாய், எல்லாம் அன்பேயாய், எல்லாம் அருளேயாய் விளங்குமென்று உறுதியாய் நம்புங்கள்! நம் மக்களுக்குச் செய்ய வேண்டிய இப் பெருங் கடமையை நாம் வழுவாது செய்துவருவோமாயின், எல்லாம்வல்ல சிவபெருமான் நமக்கு அருள் புரிவது திண்ணமென்றும் உறுதியாய் நம்புங்கள்! ஓம் சிவம்.

